இந் நெடுவெண்ணிலவினார் பாட்டு, தோழி தலைவனிரவு வருதல் ஒல்லாதெனச் சொல்லி, குறிப்பால் வரைவுகடாவும் கருத்தொடு முடிவுகொள்ளியல்பிற்றாதல் காண்க.

இச் சூத்திரத்திற்கு. ''பொருள் முடிக்க வேண்டப்படும் பிறிதொரு சொல் எஞ்சி வருவது சொல்லெச்சம்'' எனவும், ''பிறிதொரு சொல் வேண்டாமல் தானே நின்று சொற்பொரு ளன்றிப் பிறிதொரு பொருள் சுட்டுவது குறிப்பெச்சம்'' எனவும் 'இருவகைத் தாம்' எனப் பொருள் கூறுவர் பழையஉரைகாரர். அவ்வெச்சங்கள சொல்லளவில் அமைவன, சொற்படல எச்ச வியலில் விளக்கப்பட்டுள்ளன. இங்குச் சொற்றொடர்ச் செய்யு ளில் கூறப்படும் இவ்வெச்சங்கள் குறித்த பொருளை முடிய நாட்டும் யாப்பின் வழித்தாய செய்யுளுறுப்பாய் ஓர் கூற்றின் பாற்படும். [கூற்றெனினும் கிளவியெனினும் ஒக்கும்]. இவை சொல்லெச்சங் குறியாமல் கிளவிச் சொற்களின் உள்ளுறை யாம் பொருளெச்சத்தையே குறித்து வரும். சொல்லும் அதன குறிப்புமாய் நிற்கும் சொல்லெச்சங்கள் சொல்லளவில் அமைந்து, ''பிரிநிலை'' முதல் பத்து வகைப்படும் என முன் எச்சவியலிற் கூறப்பட்டன. செய்யுளுறுப்பாம் உள்ளுறைச் சொற்றொடர்ப் பொருளெச்சங்கள், சொல்லோடு முடிவு கொளியற்கைய [1] குறிப்பொடு முடிவு கொளியற்கைய [2] என்றிருவகைத் தாம். சொல்லெச்சங்களை 'அவைதாம் தத்தம் குறிப்பின் எச்சம் சுட் டும்' என முன் எச்சவியலிற் கூறியதன் பிறகு, இங்குச் சொற் றொடர்ப் பொருளெச்சங்களைச் ''சொல்லொடும் குறிப்பொடும் முடிவுகொளியற்கைய'' எனவும், எழுத்தொடும் சொல்லொடும் புணராதாகிப் பொருட்புறத்ததுவே'' எனவும் செய்யுளியலில் தொல்காப்பியரே வேறு கூறுதலால், இவ்வீரெச்ச வகைகளும் வெவ்வேறினமென்பதே அவர் கருத்தென்று தெற்றென விளங் கும். இவற்றுள் சொல்லளவிற்றாய முன்னவை பத்தும் சொல் லதிகார எச்சவியலில் ''பிரிநிலை வினையே''என்னும் 34-ஆவது சூத்திர முதல்''சொல்லெனெச்சம்''என்னும் 45-ஆவது சூத்திர மீறாகப் பல சூத்திரங்களால் தெளிக்கப் பெற்றிருப்பதாலும், அவற்றிற் சொற்குறிப்பெச்சம் ''அவை தாம், தத்தம் குறிப்பின் எச்சமாகும்'' எனும் 44-ஆம் சூத்திரத்திலும், சொல்லெச்சம் ''சொல்லெனெச்சம், முன்னும் பின்னும் சொல்லள வல்லது

எஞ்சுதலிலவே'' எனும் 45-ஆம் சூத்திரத்திலும் தனித்தனியே விளக்கப்பட்டிருப்பதாலும், சொல்லிலக்கணத்தின்பாற் பட்ட அவ்வெச்சங்கள் அமைவுபட ஆண்டுச் சொற்படல எச்சவியலில் கூறப்பெற்றவற்றையே ஈண்டுச் செய்யுளியலில் மீண்டும்கூறும் குற்றமுடையர்தொல்காப்பியர் என்பது பொருந்தாமையாலும், இச் செய்யுளியற் சூத்திரத்திற்குப் பழைய உரைகாரர் கூறும் பொருள் பொருந்தாமை அறிக.

II. இனிச் செய்யுளை ஆக்கும் புலவனின் நோக்கங் கொண்டு உள்ளுறை ஐந்து வகைப்படும் என்பதைத் தொல் காப்பியர் ''உடனுறை, உவமம், சுட்டு, நகை, சிறப் பெனக்—கெடலரு மரபின் உள்ளுறை ஐந்தே'' எனும் பொருளியல் 46-ஆம் சூத்திரத்தால் விளக்கினர்.

[i] இவற்றுள் உடனுறை என்பது இறைச்சியாதம். ஒரு கூற்றில் வரும் சொற்களின் வெளிப்படைச் செம்பொரு ளின் வேருய் அக்கூற்றில் உள்ளுறுத்திறுவது 'இறைச்சி' அல் லது 'உடனுறை' எனப்படும். 'இறுதல்', 'இறைச்சி' என்பன 'தங்குதல்' அதாவது 'அடங்கி நிற்பது' எனும் பொருள் தரும். எனவே, ஒரு கூற்றில் அதன் மொழிப்பொருளின் புறத்தே ''திறத்தியல் மருங்கிற்றெரியுமோர்க்கே'' உய்த்துணரப் புல னுகும் புதைபொருளை இறைச்சி எனவும், உடனுறை எனவும் வழங்குவர் பண்டைப்புலவர் அது, ''இறைச்சிதானேபொருட் புறத்ததுவே'' (சூ.33) ''இறைச்சியிற் பிறக்கும் பொருளு மாருளவே'' (சூ.34) ''அன்புறு தகுந''... [சூ.35] எனும் பொருளியற் சூத்திரங்களால் விளக்கப்படும். இறைச்சியா முள் ளுறைக்குச் செய்யுள்:—

''நசைபெரி துடையர், நல்கலு நல்குவர்;
பிடிபசி களைஇய பெருங்கை வேழம்
மென்சினை யாஅம் பொளிக்கும்
அன்பின, தோழி! அவர்சென்ற வாறே''.

[குறுந். 37]

இக்கூற்றில் ஒப்புக்குறிப்பின்மையால் உள்ளுறையுவமம் கொள்ளற்கில்லை. எனில், ஆண் யானை தன் பிடியின் பசி தீர்க்க யாமரத்தின் பட்டையுரித்தூட்டும் காதற்காட்சியுடைய வழியிற்

சென்ற தலைவன் அக்காட்சியாற் றலைவியைத் தான் உடன் இருந்து பேணி இன்பம் நுகர்வித்தாற்றும் தன் ஆண்மையறத்தை நினைப்பதும் நினைத்து மீள்வதும் கூடுமென்னும் குறிப்புடைமையா லிஃதிறைச்சியாதல் காண்க.

[ii] உள்ளுறை உவமமாவது ஒப்பும் பொருளும் ஒருங்கு புலப்படவரும் ஏனை உவமம் அல்லது செவ்வொப்பணி போலாது, கூறப்படும் கருப்பொருட் செய்தியினகத் தடங்கி, அச்செய்தியே ஒப்பாய், அது விளக்கும் பொருள் கூருக்குறிப்பாய் உய்த்துணர்வோரால் மட்டும் அறிய நிற்பது.

உள்ளுறை உவமம், அகத்திணை இயலில்

[1] ''உள்ளுறை தெய்வ மொழிந்ததை நிலமெனக்
கொள்ளு மென்ப குறியறிந் தோரே''

[அகத். சூ.50]

[2] ''உள்ளுறுத் திதனோ டொத்துப்பொருள் முடிகென
உள்ளுறுத் துரைப்பதே உள்ளுறை யுவமம்''.

[அகத். சூ.51]

எனும் சூத்திரங்களால் தெளிக்கப்பட்டது.

உள்ளுறை உவமம் வருமாறு:—

'' கொடிப்பூ வேழம் தீண்டி அயல
வடுக்கொள் மாஅத்து வண்டளிர் நுடங்கும்
மணித்துறை யூரன் மார்பே
பனித்துயில் செய்யு மின்சா யற்றே''. [ஐங். 14]

இதில், கொடிப்பூவேழம் பரத்தையாகவும், மா தலைவியாகவும், வேழம் தீண்டி வடுப்படு மாவின்வண்டளிர் நுடங்கல் பரத்தைநலிய வருந்துந் தலைவியின் மெலிவாகவும், (தெய்வ மொழிந்த) மருதநிலக் கருப்பொருள்களை நிலனுக்கி அவற்றால் ஒப்புப் பொருளை உள்ளுறுத்தமைத்தலால், இஃ துள்ளுறை யுவமமாகும்.

(iii) சுட்டு என்பது ஒரு கூற்றின் வெளிப்படையான சொற்பொருளன்றி அக்கூற்றின் உள்ளுறையாகப் பிறிதொன்றைக் குறிப்பால் உணர்த்துவதாகும். கருதிய பொருளைக் கூற்றின் சொற்றுணைகொண்டே சுட்டுவதும்,சொற்பொருளின்

புறத்தே குறிப்பாலுணரச் சுட்டுவதும் எனச் சுட்டு இரு வகைத்தாம். இவை முறையே 'சொல்லொடு முடிவு கொள் இயற்கை புல்லிய கிளவி', (1)குறிப்பொடுமுடிவுகொளியற்கை புல்லிய கிளவி, [2] என வகுத்துக் கூறப்பட்டன.

(1) இவற்றுள் முன்னது கூற்றின் சொற்றுணைகொண்டே செய்யுளிற் புலவன் உட்குறிப்பை உணர்த்துவதாகும்.

'' ஒப்பொடுபுணர்ந்தஉவமத்தானும்,தோன்றுவதுகிளந்த துணிவினானும்,'' என்றிருவகைத்தாம் பிசிநிலைகளும் ''சொல் லொடு முடிவு கொளியற்கையவாம் சுட்டி லடங்கும், 'பிறை கௌவி மலை நடக்கும்' என்னும் ஒப்பொடு புணர்ந்த உவமம், அக்கூற்றின் சொற்றுணை யானே யானையைச் சுட்டுவதாயிற்று. இனி,

'' நீராடான் பார்ப்பான், நிறஞ்செய்யான்,
நீராடின் ஊராடும் நீரிற்காக்கை.''

என்பதில், ஒப்பின்றிக் ''கூறுவோன் உள்ளத்திற் தோன்றுவது கிளந்த துணிவுறு'' கூற்றும் அதன் சொல்லாற்றலாலேயே நெருப்பைக் குறிப்பதாயிற்று. இவ்வாறு இவ்விருதிறப் பிசி நிலை வகையும் 'சொல்லொடு முடிவு கொளியற்கை புல்லிய கிளவி' யாதல் கண்கூடு. உற்று நோக்கின், உள்ளுறை உவம மும், 'சொல்லொடு முடிவு கொளியற்கை புல்லிய' உள்ளுறை யேயாம். உள்ளுறை யுவமம் யாண்டும் கருப்பொருள்பற்றியே வரும்; சுட்டுக் கவ்வரையறையில்லை.

[2] இனி, ''எழுத்தொடும் சொல்லொடும் புணராதாகிப் பொருட் புறத்ததுவே குறிப்பு மொழியாகும்'' [செ. சூ. 172] என விளக்கப் பெற்றவை 'குறிப்பொடு முடிவு கொளியற்கை புல்லிய' சுட்டு வகையாகும். 'கற்கறிக்க நன்கட்டாய்' என்பது போல்வன இவ்வகைச் சுட்டாகும். உறந்தையைப் 'பறவாக் கோழி' என்பதும், சேரர் பேரூரைப் 'பூவா வஞ்சி' என்பதும் போல்வன இதன்பாற்படும். இவையே போல் இறைச்சி வகையும் ஓரளவு ''குறிப்பொடு முடிவு கொளியற்கை புல்லிய'' உள்ளுறையாகும். இவற்றிடை வேற்றுமை பின்னர்க் காட்டுதும.

[iv] சிறப்பென்பது, ''புகழொடும் பொருளொடும் புணர்ந்தன்றாகி,'' வெளிப்பட விரியாது (124), கூற்றானன்றிக் குறிப்பால் உணர்த்தும் 'புகழொடு புணர்ந்த அங்கதச்' செய்யுளும், அன்ன பிறவுமாகும். இது அங்கதத்தின் ஒருவகையாய்ப் ''புகழொடும் பொருளொடும் புனர்ந்தன்றாயிற் செவியுறைச் செய்யுள் என்மனார் புலவர்'' [செ. சூ. 124], எனும் சூத்திரத்தால் தெளிக்கப்பெற்றது.

சிறப்புக்குச் செய்யுள் :-

'' பாரி பாரி என்று பல வேத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப புலவர்;
பாரி ஒருவனு மல்லன்;
மாரியு முண்டீண் டுலகுபுரப் பதுவே.'' [புறம். 107]

இது பழிப்பதுபோலப் புகழ்வதால், சிறப்பென்னு முள்ளுறையாயிற்று.

[v] 'நகை' என்பது பழிகரக்கு மொழிகரந்து, வசையொடு வரும் அங்கதச் செய்யுளும். அது போல்வன பிறவுமாகும். இது செய்யுளியலில் விளக்கப்பட்டுள்ளது.

''வசையொடு நசையொடும் புணர்ந்தன் றாயின்
அங்கதச் செய்யுள் என்மனார் புலவர்.'' [செய்.சூ. 129]

'' மொழிகரந்து சொல்லினது பழிகரப் பாகும்.''
[செய். சூ. 126]

பட்டாங்குக் கரவாவசைகூறும் செம்பொருளங்கதம் உள்ளுறையாகாமை வெளிப்படை.

நகை என்னு முள்ளுறைக்குச் செய்யுள் :—

'' இவ்வே, பீலியணிந்து மாலை சூட்டிக்
கண்டிரள் நோன்காழ் திருத்திநெய் யணிந்து
கடியுடை வியனக ரவ்வே; அவ்வே
பகைவர்க் குத்திக் கோடுநுதி சிதைந்து
கொற்றுறைக் குற்றில மாதோ
.................................................
அண்ணலெங் கோமான் வைந்நுதி வேலே.''
(புறம். 95)

[குற்றில=குறிய குடிசை யுற்றுள.]

இது, தொண்டைமானை ஔவை புகழ்வதுபோலப் பழிப்ப தால், வசைகரந்த அங்கதமாம் 'நகை' என்னும் உள்ளுறை யாதல் காண்க.

இதன் பிற்பகுதி அதிகமானைப் பழிப்பதுபோலப் புகழும் சிறப்பென்னும் உள்ளுறையாதலுமறிக.

III. இனி, உள்ளுறை உவமம், இறைச்சி, இவை தம்முள் அறியக்கிடக்கும் வேறுபாடுகளும், இவற்றிற்கும் சுட்டு என் னும் உள்ளுறைக்குமுள்ள ஒற்றுமை வேற்றுமைகளும்பற்றிப் பல்காலும் பலவாறு மயக்கம் நேருகிறது. அதனால் அவற்றின் இயல்பையும் சிறிதாராய்ந்து தெளிய முயல்வது ஈண்டு வேண்டப்படுவதாம். ஆகவே, இவற்றினியல் விளக்கும் தொல் காப்பியர் சூத்திரங்களால் தேறத்தகுவனவற்றைத் தேர்ந்து தெளிதல் இன்றியமையாதது.

III. [i] (1) 'உள்ளுறை உவம'த்தை அகத்திணை இயலில் மூன்று சூத்திரங்களால் விளக்குவர். [1] ''உள் ளுறை உவமம்'ஏனை உவமமெனத்—தள்ளாதாகும்திணையுணர் வகையே'' [அகத். சூ. 45]

குறிப்பால் வரும் 'உள்ளுறை உவமம்', செவ்வொப்பணி போலாது, யாண்டும் காதலொழுக்கம் உணர்த்துதல் தவிராது என இச்சூத்திரத்திற்கூறி, இவ் வீருவமங்களுள் உள்ளுறை உவமத்தின் இயல்பை அடுத்த சூத்திரத்தாற் கூறுவர்.

[2] ''உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை நிலனெனக்
கொள்ளும் என்ப குறியறிந் தோரே.''

[அகத்திணை சூ. 46.]

என்பது இரண்டாம் சூத்திரம். இதனால் தெய்வம் தவிரப் பிற கருப்பொருள்களுள் ஒன்றைக் களனாகக் கொண்டே உள் ளுறை உவமம் வரும் என்பது பெறப்படுகின்றது. கூறப்படும் கருப்பொருட் செய்தியே, ஒப்பாய், கூறக் கருதிய பொருள் அவ்வொப்பின் உள்ளுறையாய், புலனன்குணர்வோர்க்கு உய்த்துணரத் தோன்றும் கூருக் குறிப்பாய்க் கருப்பொருளில் மறைந்துதோன்றுவதே உள்ளுறை உவமத்தின் இயலாதலின், கருப்பொருட் டொடர்பு இதற்கு இன்றியமையாததாகும்.

[3] "உள்ளுறுத் திதனோடு ஒத்துப்பொருள் முடிகென
உள்ளுறுத் திறுவதே உள்ளுறை உவமம்"

(அகத்திணை சூ. 47.)

என்பது இவ் வுவமம் பற்றிய மூன்ரும் சூத்திரம். உள்ளுறை உவமத்துக்குக் கருப்பொருட்சார்பு இன்றியமையாத தென முன் சூத்திரத்திற் கூறி, இதில் 'கூறப்படும் கருப் பொருட்செய்தியே வெளிப்படு பொருளாய் நிற்க, அதனகத் தடங்கி அச்செய்தியே ஒப்பாகி, அதை ஒத்துக் கூறக்கருதும் பொருள் குறிப்பால்உணர நிற்பதே'உள்ளுறை உவமம்'என்று அதனியல் விளக்கப்பட்டது.

எனவே, இம்மூன்று சூத்திரங்களால் முறையே உள்ளுறை உவமம், [1] அகத்திணைவகை உணர்த்தல் தவிராதென்பதும், (2) கருப்பொருட் செய்தியுள் கூறுக் குறிப்பாய் அடங்கி நிற்பதும், [3] அக் கருப்பொருட் செய்தியே ஒப்பாய். அவ் வொப்புக்கேற்ப அதைஉய்த்துணர்வோர்க்குக்கருதியபொருள் புலப்படுமாறு அமைவதும். இவ் வுவம உள்ளுறையின் இயல்க ளெனத் தெளிக்கப்பட்டது. சுருங்கச் சொல்லின். உள்ளுறை உவமம் [1] ஒப்பு அல்லது உவமத்தின் ஒருவகையாய். அக வொழுக்கவகை விளக்கத் தவிராதென்பதும், [2] அது தெய்வம் தவிர யாதானும் ஒரு கருப்பொருளைக் கந்தும் களனுமாய்க் கொண்டே வருமென்பதும், [3] அடைவு படக் கூறப்பட்ட கருப்பொருட் செய்தியினடங்கி அதுவே ஒப்பாக அவ்வொப்புக் கேற்ற பிறிதொரு பொருளாய்க் கூற்றின் புறத்தே குறிப்பால் உணரத் தோன்றும் என்பதும், இம் மூன்று சூத்திரங்களின் கருத்தாகக் காண்கின்ரேம்.

"இருஞ்சா யன்ன செருந்தியொடு வேழம்
கரும்பின் அலமரும் கழனி ஊரன்." [ஐங்.18]

இதில், 'வாட்கோரையொடு கொறுக்கைப்புல்லும் கரும் போடசையும் வயலூரன்' என்றது, பரத்தையர் தம்பாங்கிய ரொடு 'குலமகளிரொப்பச் செம்மாக்க அவர்பால் ஒழுகும் தலைவன்' என்பதைக் குறித்தலால், இது கருப்பொருளை நிலனு கக் கொண்டெழுந்த உள்ளுறை உவமமாயிற்று.

III [i] [2] இனி, 'இறைச்சி'யாவது ஒரு கூற்றின்புறத்தே அதன் மொழிப்பொருளின் வேருய் நுனித்து நோக்குவார்க்கு மட்டும் குறிப்பாலறியத் தோன்றும் மறைபொருளாம். இதனை 'வியங்கியம்' எனவும், 'தொந்யார்த்தம்' எனவும் கூறுவர் வடநூலார். இவ் விறைச்சியியல் [அ] ''இறைச்சிதானே பொருட்புறத்ததுவே'' எனும் பொருளியற் சூத்திரத்தால் பெறப்படுகின்றது. இதில் கூறப்பட்ட 'பொருள்' என்பது கூற்றின் சொற்பொருளேயே குறிக்கும். ''எழுத்தொடும் சொல்லொடும் புணராதாகிப் — பொருட் புறத்ததுவே குறிப்பு மொழியாகும்'' என்பதனுலும் தொல்காப்பியரின் இக்கருத்து வலியுறுதல் காண்க. இது கருப்பொருளைப் பற்றிவருமென யாண்டும் தொல்காப்பியர் கூற்ருனும் குறிப்பானும் உணர்த் தாமையின், அஃதவர் கருத்தன்மை அறிக. ''இறைச்சிதானே உரிப்புறத்ததுவே'' எனும் பாடம் ஏடு பெயர்த் தெழுதுவோர் பிறழக் கொண்டதாகத் தோற்றுகிறது. உரிப்பொருட்சிறப்பை விளக்கும்அகத்துறைச் செய்யுளில் உள்ளுறை உவமம்போலவே பெருவழக்காய் ஆளப்படுவது இறைச்சி. இறைச்சியால் உணர்த்தப்படுவதுஉரிப்பொருளேயாகும். அதனுல் உரியையே சிறப்பாய் விளக்கும் இறைச்சியை 'உரிப் புறத்தது' எனக் கூறுவது அதனியலுக்கு முரணுவதால், அப்பாடம் பொருந் தாமை அறிக.

இச் சூத்திரத்தின் நேரிய பாடங்கொண்ட நச்சினுர்க்கினியர் 'உவமம் சுட்டாக் கருப்பொருள் தன்னுள்ளே தோன்றும் பிறிதொரு பொருளைக் குறிப்பது இறைச்சி' என இச் சூத்திரத் திற்குப் பொருள் கூறுவர். கருப்பொருளின் சார்பு உள்ளுறை உவமத்துக்குப் போல இறைச்சிக்கும் வேண்டப்படுவதான குறிப்பே இறைச்சி பற்றிய தொல்காப்பியர் சூத்திரங்கள் ஒன்றிலேனுமில்லாதது கருதற்பாலது. கருப்பொருட் சார்பு இறைச்சிக்கும் இன்றியமையாததாக நச்சினுர்க்கினியர் கொண்டதினுலேயே, கருப்பொருளையே பற்றுக் கோடாய்க் கொண்டுவரும் உள்ளுறை உவமத்துக்கும் அதை வேண்டாத இறைச்சிக்கும் வேறுபாடு விளங்காமல் மயங்க நேர்ந்தது.

[ஆ] ''இறைச்சியிற் பிறக்கும் பொருளுமா றுளவே
திறத்தியல் மருங்கில் தெரியு மோர்க்கே.''
[பொருளியல் சூ. 34]

எனும் பொருளியற் சூத்திரத்தையும்,இறைச்சியினியல்பே கூறுவதாகக் கொண்டு அதற்கு வேறுபொருள் கூறுவர் நச்சினார்க்கினியர். இவர், இறைச்சி கருப்பொருளைச்சார்ந்தே வருமெனக் கருதினராதலின், இச் சூத்திரம் கருப்பொருட் டொடர்புடைய உள்ளுறை உவமத்தினின்றும் இறைச்சியை வேறுபடுத்திக் கூறவந்தது போலக் கொண்டு, இதற்குப் பொருந்தாப் பொருள் கூறுவாராயினர். அது சூத்திரச் சொற் போக்குக்கும் நூல்நோக்குக்கும்ஒவ்வாது. ''முன்னைச் சூத்திரத் திற் கூறியாங்கு,ஒரு கூற்றில் அதன்சொற்பொருளின் வேறாய் இறைச்சி எனும் உள்ளுறை அதாவது மறைபொருள் தோன்று வதும் தவிர, அவ்விறைச்சி அல்லது மறைபொருளினின்றும் நுணுகி ஆராயும் திறனுடையார்க்குப் புலனாகும் மற்றொரு மறைபொருட்குறிப்புத் தோன்றுவதும் உண்டு,'' என்பதே இச்சூத்திரத்திற்குரிய நேரிய பொருளாகும். இதற்கு இளம் பூரணர் தரும் உரையும் இக்கருத்தையே வலியுறுத்தும். ''இறைச்சிப்பொருள்வயிற் றோன்றும் [பிறிதுமோர்] பொருளும் உள, பொருட்டிறத்தியலும் பக்கத் தாராய்வார்க்கு'' என்பது இதற்கு அவர் கூறும் உரையாகும். எனவே, [1] ஒரு கூற்றின் சொற்பொருளின் வேறாய், அதன் புறத்தே குறிப்பிற் றோன்றும் பிறிதொரு பொருளே உடனுறை அல்லது இறைச்சி என்பதும், [2] அவ்விறைச்சியினின்றும் உய்த்துணர்வோர் அறியக் கிடக்கும் உட்கருத்து இன்னும் வேறுவதுமுண்டு என்ப தும், முறையே இவ்விரு பொருளியற் சூத்திரங்களானும் விளக் கப்படும் பொருள்களாகும்.

''அம்ம வாழி தோழி! இன்றவர்
வாரா ராயினோ நன்றே. சாரற்
சிறு தினை விளைந்து வியன்க ணிரும்புனத்து
இரவரி வாரிற் றொண்டகச் சிறுபறை
பானாள் யாமத்தும் கறங்கும்,
யாமங் காவல ரவியா மாறே.'' [குறுந். 375]

இதில் 'இரவுக்குறிபெற்று வரையாது வந்தொழுகும் தலைவன் சிறைப்புறத்தானாக, அவன் கேட்கத் தலைவிக்குக் கூறுவாள்போலத் தோழி, 'யாமங் காவலர் உறங்காவாறு தினைக்கதிர் அரிவோரின் பறை யாமத்தும் கறங்குதலால் இன்றிரவுவருதல் நன்றன்'றென அவனுக்கறிவுறுத்துவது, இச் செய்யுட் கூற்றின் சொற்பொருளாகும்.

இனி, ''சிறுதினை விளைந்து முதிர்ந்ததால் அதனை அரியப் பகல் போதாமல் இரவுமரிவாரின் பறை யாமத்தும் கறங்க, அதனால் காவலர் அவியார்[ அதாவது உறங்கார்]; அதனால் பகலுமவன் வருதல் ஒல்லாது; இனித் தினையரிந்து முடிந்ததும் தலைவி புனங்காவலொழிந்து இற்செறிக்கப்படுவாளாகவே இனி அவன் இராப்பகலிரு போதும் வாரற்க,'' எனும் குறிபபு இக் கூற்றின் சொற்புறத்தே தோன்றும் இறைச்சியாகும்.

இனி, அதன்மேலும் இதில், ''இவ்வாறு களவொழுக்கம் தடைப்படும்; இனி நீ இவணலம் நுகர விரும்புவையேல் தாழாது விரைந்து வரைந்தெய்துக'' என வரைவுகடாவுங் குறிப்பு, இக்கூற்றின் இறைச்சியில் உய்த்துணரத் தோன்றும் பிறிதொரு பொருளாம் உட்கருத்தாகும்.

III. [i] [3] இறைச்சி உள்ளுறை உவமம், இவற்றுள் வேறுபாடுகளாவன:—

[1] கடவுள் ஒழிந்த கருப்பொருளொன்றைக் களனாகக் கொண்டு, அக் கருப்பொருட் செய்தியையேஒப்பாக்கிக் கருதிய பொருளை அவ்வாறன்றிக் குறிப்பாலுணர்த்துவது உள்ளுறை உவமம்; அவ்வாறன்றிக் கருப்பொருட் சார்பே வேண்டாமல், சொற்களின் செம்பொருளின் புறத்தே ஒரு கூற்றில் புலனன்குணரும் புலவர்க்குக்குறிப்பாற்றோன்ற,செய்யுளில்புலவன் கருதியவைக்கும் மறைபொருளே இறைச்சியாகும். உள்ளுறையுவமம் கருப்பொருள்பற்றியன்றி வாராது: இறைச்சிக்கது வேண்டா.

[2] கருப்பொருட் சார்பு வேண்டாதாகவே, இறைச்சிக்கு எவ்வகை ஒப்பு அல்லது உவமக் குறிப்பும் இன்றாகும். இது இவற்றிடையுள்ள மற்றொரு வேற்றுமை.

[3] இன்னும் ஒரு வேறுபாடும்இவற்றிடைக் காணலாம். உள்ளுறை உவமம், கூறிய கருப்பொருட் செய்தியையே ஒப்பு அல்லது உவமையாகக்கொண்டு, தானதன் உட்பொருளாக [உபமேயமாகக்] குறிப்பிற் புலப்படுவ தாகலானி, உள்ளுறை உவமம் கருப்பொருட் செய்தி கூறும் "சொல்லொடு முடிவு கொளியற்கைப் புல்லிய" கிளவியாகும். இறைச்சியோ, கருப்பொருட் சார்பும ஒப்பும் வேண்டாது, ஒரு கூற்றின் சொற் பொருளின் வேருய் அதன் புறந்தே குறிப்பிற்ரேன்றுமாதலின், அது "குறிப்பொடு முடிவு கொளியற்கை புல்லிய" கிளவி யாகும். [கிளவி எனினும, கூற்றெனினும் ஒக்கும்.]

"வார்கோட்டு வயத்தகர் வாராது மாறினும்
குருமயிர்ப் புருவை ஆசையின் அல்கும்
மாஅல் அருவித் தண்பெருஞ் சிலம்ப !
நீயிவண் வருஉங் காலை
மேவரு மாதோ இவணலனே தெய்யோ."

[ஐங். 238]

இச், செய்யுளில், முதன் மூன்றடியும் உள்ளுறை உவமம்; பின்னிரண்டும் இறைச்சி. முதன் மூன்றடிகளில், நீண்ட கொம்புடைய விறுகொள் பொருதகரான யாட்டுக்கடா தன்னை விரும்பி வாராமல் வேறுபட்டாலும், மென்மயிர்ப் பெட்டை யாடு 'கடாவரும்' என்னும் நசையால் தங்கும் கருநீரருவி குளிர்விக்கும் 'பெருமலை யுடையோனே!' எனக் கூறப்பட்டது. அதனல், "தலைவன் தலைவிபால் வாராமல் தவறிழைக்கும் தறுகண்மையன் ஆயினன்; எனினும் தன் மலையருவிபோல் தட்பமுடையனுகலின், தலைவி அவன் இன்னும் தன்னைத் தலை யளிக்க வருவனென நம்பி உயிர்வாழாநின்ருள்" எனக் குறிப் பாற்ரேன்றும் உள்ளுறை உவமம் இச்செய்யுட் கூற்றினுள் ளடங்கியதாய், அக்கூற்றின் செய்தியோடொத்துப் பொருள் முடிவதாயிற்று, எனவே, இஃது உள்ளுறை உவமமாதல் காண்க.

இதன் பின்னிரண்டடியில், தலைவன் வரையா தொழுகும் வன்கண்மையைச் சுட்டி, விரைவில் தலைவியை அவன் வரையு மாறு தூண்ட விரும்பும் தோழி, "நீ வருங்கால் தலைவி

உன்னைக் காணும்மகிழ்ச்சியினால், பிரிவாலிழந்த அவள்பொலிவு உன்னுடன் வரும்'' எனக் கூறி, ''உன்பொருட்டே உயிர் வாழும் தலைவிபால் வந்துநீ காணுவது அவள் பொலிவென்றே; நீ வாராமையால் இவள் நலனழிந்து மெலிவது நீ அறியாய்; அவள் நலன் அழியாமற் பேண விரும்புவையேல், விரைவில் இவளை வரைவாயாக'' எனக் குறிக்கின்றாள். இக்கருத்து அத்தோழி கூறிய சொற்பொருளின் வேறாய், ஒப்பொன்றுமின்றிக் குறிப்பாகத் தோன்றுதலால், இஃது இறைச்சியாயிற்று.

இதில் கருப்பொருட் சார்பும் ஒப்புமின்மை கண்கூடு.

III. [i] [4] இவ்வாறு தம்முட் பல வேறுபாடுடைய வேனும், இவற்றிடையுள்ள சில ஒற்றுமைகளும் கருதற்குரிய வாம். அவையாவன:-

[1] இவ்விரண்டும் உள்ளுறை வகைகளாதல் ஒன்று.

[2] இன்னும், இவை இரண்டும் அகவகைக்கே பெரு வழக்காய் வழங்கிவரும் சிறந்த செய்யுளுறுப்புக்க ளாதல் மற்றொன்று.

III. [ii] (1) இனி, ''எழுத்தொடும் சொல்லொடும் புணராதாகிப்—பொருட்புறத் ததுவே குறிப்பு மொழி என்ப'' என விளக்கப்பெற்ற ''சுட்டு'' என்னும் உள்ளுறையும் இரு வகைத்தாம். [1] ஒன்று, உள்ளுறை உவமம் போல, ஒப் பொடு புணர்ந்த உவமத்தாய் வரும் பிசி போல்வன ''சொல் லொடு முடிவு கொளியற்கை புல்லிய கிளவி''மேற்றாம் [2] மற் றொன்று, இறைச்சி போலத் ''தோன்றுவது கிளந்த துணிவி னால் வரும் பிசி'' போல்வனவும், ''கூற்றிடை வைத்த குறிப் பாம்'' அங்கதம் போல்வனவும், ''குறிப்பொடு முடிவு கொளியற்கை புல்லிய கிளவி''மேற்றாம்.

iii. ii. [2] சுட்டுக்கும், இறைச்சி உள்ளுறையுவமங்கட்கு முள்ள வேற்றுமையாதெனின், [அ] உள்ளுறை உவமமும் இறைச்சியும் 'எழுநிலத் தெழுந்த செய்யுள் வகையில்' பெரு வழக்காய் அடிவரை கொள்ளும் பாட்டிற் பயில்வது. குறிப்பாய் வரும் சுட்டு அவ்வாறன்றி உரை பிசி அங்கதம் முதலியவற்றி லும் வருவதாகும்.

[ஆ] உள்ளுறையுவமம் கருப்பொருள் பற்றியே வரும். சுட்டுக்கது வேண்டுவதன்று.

[இ] இறைச்சியும் உள்ளுறை உவமமும் புறத்துறையில் விலக்கில்லை எனினும், அகத்துறைகளுக்கே சிறப்புரிமை கொண்டு வழங்கும்; சுட்டு, புறத்தும் அகத்தும் ஓராங்கு ஒத்தியலும்.



# மெய்ப்பாட்டியற் புத்துரைச் சிறப்பு

பேராசிரியர். திரு. ச. சாம்பசிவனார். எம். ஏ.,
செந்தமிழ்க் கல்லூரி, மதுரை.
[செயலர், ச. சோ. பாரதியார் கல்வி அறப்பணிக்குழு.]

**ஆற்றல்சேர் ஆய்வாளர் :**

'வடவேங்கடந் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறும் நல்லுலகத்'தைப் பொறுத்த மட்டில், ஈராயிரம் ஆண்டுகட்கு முனைனர் வாழ்ந்த தெய்வப் புலவர் திருவள்ளுவரைத் 'திறனாய்வாளர்களின் முன்னோடி' எனலாம்!

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு" *

என்ற குறட்பா வாயிலாகத் திறனாய்வின் இன்றியமையாமையைச் சுட்டிக்காட்டுகின்றார் வள்ளுவர் எனலாம்! இவருக்குப் பின், இடைக்காலத்தே வாழ்ந்த உரையாசிரியர்களான இளம்பூரணர், சேனாவரையர், பேராசிரியர், நச்சினார்க்கினியர், கல்லாடர், தெய்வச் சிலையார் போன்றோர் தொல்காப்பியத்திற்கு உரைகண்டதன் வாயிலாகத் திறனாய்வுத் துறையினை ஓரளவு வளர்த்துள்ளனர் எனலாம். மணக்குடவர், பரிமேலழகர் முதலானோரும் திருக்குறளுக்கு உரைவிளக்கம் கூறுமுகத்தான் இத்துறைக்கு ஆக்கமளித்தனர்! இவர்கட்குப்பின்னர், நெடும பல்லாண்டுகளாகத் திறனாய்வுத்துறை, வளர்ச்சி பெற்றதாகத் தெரியவில்லை. பிற்காலத்தே தோன்றிய மாதவச் சிவஞான முனிவர், தொல்காப்பியப் பாயிரத்திற்கும், முதல் நூற்பாவுக்கும் விரிவுரை எழுதியுள்ளார். 'இலக்கணக் கடல்' எனப் போற்றப்படும் அரசஞ்சண்முகனாரும் 'தொல்காப்பியப் பாயிர விருத்தி' எழுதியுள்ளார். 'செந்தமிழ்', 'தமிழ்ப் பொழில்', 'செந்தமிழ்ச் செல்வி' முதலான இதழ்களில், இலக்கண-

* திருக்குறள். 423.

இலக்கியங்களைப்பற்றிஅவ்வப்போதுஅறிஞர் சிலர், திறனாய்வுக் கட்டுரைகள் எழுதிவந்துள்ளனர். 'உரையில் ஐயம்', 'உரையில் மறுப்பு', 'மறுப்புக்கு மறுப்பு' என 'இலக்கிய-இலக்கண மோதல்கள்' பல, அறிஞர் பலரிடையே எழுந்தன! எனினும் இவையெல்லாம், திறனாய்வின்பாற்பட்டனவே! இன்று நம்மிடையே பல திறனாய்வாளர்கள் தோன்றித் தமிழன்னையை அணிசெய்து வருகின்றனர். இவர்கட்கெல்லாம் வழிகாட்டுநராக, முன்னோடியாக -ஆற்றல்சேர் ஆய்வாளராக விளங்கியவர் நாவலர் - கணக்காயர்-டாக்டர் ச. சோமசுந்தரபாரதியார் ஆவார்!

புத்துரைப் பொலிவு :

பண்டை உரையாசிரியர்களைப் போன்றே நாவலர் பாரதியாரும், தொல்காப்பியத்திற்குப் புத்துரை கண்டுள்ளார். "எழுத்தினும், சொல்லினும் விடப் பொருட்பகுதியில் உரைகாரர், தொல்காப்பியர் நூற்கருத்தைப் பல்காலும் பிறழக் கொண்டு மயங்கினர்" என உணர்ந்த நாவலர் பாரதியார், பொருளதிகாரத்தின் அகத்திணை, புறத்திணை, மெய்ப்பாடு என்னும் மூன்று இயல்கட்கும் முழுமையாகவும் முறையாகவும் உரை வழங்கியுள்ளார். இடையீடுபட்ட நெடும பல்லாண்டுகட்குப் பின்பு, இங்ஙனம் இயல்கள் வாரியாக உரைகண்ட பெருமை நாவலர் பாரதியார் ஒருவரையே சாரும்! ஆதலின், 'தொல்காப்பிய உரைகாரர் வரிசையில் இவரும் ஒருவர்' எனும் உரை சாலவும் பொருந்தும்!

இம்மெய்ப்பாட்டியலுக்கு நாவலர் பாரதியார் காணும் புத்துரைகள் பலவாகும். அவற்றுள், ஒருசிலமட்டும் ஈண்டு எடுத்துக் காட்டுதல் சாலும்!

(1) 'மெய்ப்பாடு' என்பதற்கு விளக்கம் கூறவந்த இளம்பூரணர், "அச்சமுற்றான்மாட்டு நிகழும் அச்சம் அவன்மாடடுச் சத்துவத்தினாற் புறப்பட்டுக்காண்போர்க்குப் புலனாகும் தன்மை மெய்ப்பாடென்று கொள்ளப்படும். மெய்யின்கண் தோன்றுதலின் மெய்ப்பாடாயிற்று. அஃதேல், இவ்விலக்கணங் கூத்தினுட் பயன்படல் உண்டாதலின் ஈண்டு வேண்டாவெனின்,

ஈண்டுஞ் செய்யுட் செய்யுங்காற் சுவைபடச் செய்யவேண்டு தலின் ஈண்டுங் கூறவேண்டு மென்க!'' என்பர்.

பேராசிரியர், ''மெய்ப்பாடென்பது பொருட்பாடு. அஃ தாவது, உலகத்தார் உள்ள நிகழ்ச்சி ஆண்டு நிகழ்ந்தவாறே புறத்தார்க்குப் புலப்படுவதோர் ஆற்ருன் வெளிப்படுதல்'' என்பர்.

நாவலர் பாரதியாரோ, மேற்காட்டிய உரைகளைப் பின் வருமாறு மறுத்துப் புத்துரைகாண்கின்ருர்:-

(அ) செய்யுள் உறுப்புக்களுள் பொருட்சிறப்பிற்கு மிக்கு உரிமையுடையது மெய்ப்பாடு. (ஆ) எனவே, செய்யுளுறுப்பை விளக்குவதே 'மெய்ப்பாடு'. [இ] 'மெய்ப்பாடு' என்பது ''அகவுணர்வுகளை ஆழ்ந்து ஆராயாமலே யாரும் இனிதறியப் புலப்படுத்தும் இயற்புறவுடற்குறியாம்! இயற்றமிழ்ச் செய்யுளில் இயற்குறியன்றிச்செற்கைக் குறி புணர்க்கும் வழக்காறில்லை! உணர்வோடு உள்ளக் கருத்தையுரைக்கப் பல செயற்கைக்குறி வகுத்துக் கோடல் கூத்துநூற் கொள்கை யாகும்! பட்டாங்கு மெய்ப்படத் தோன்றும் உள்ளுணர்வை மெய்ப்பாடென்றது ஆகுபெயர். உள்ளுணர்வை உரிய இயற்புறக் குறியால் புலவர் செய்யுளில் புலப்பட அமைத்தல் வேண்டுமாதலின், செய்யுளுறுப்புக்களுள் மெய்ப்பாடு சிறப்பிடம் பெற்றது. அதனை விளக்கும் பகுதி மெய்ப்பாட்டியல்!'' என்பது இவர் விளக்க மாகும்.

''தொல்காப்பியர் இவ்வியலில் விளக்குவது இயற்றமிழ்ச் செய்யுளுறுப்பே தவிரக் கூத்து உறுப்பு அன்று! பேராசிரியர், 'நாடக நூலாசிரியர்க்கு' எனக் கொண்டு, 'சுவை' என்றும் 'விறல்' என்றும் கூத்தியற் சொற்களைப் பயன்படுத்துகின்ருர். ஆனல் தொல்காப்பியரோ, 'மெய்ப்பாடு' என்ற சொல்லையே ஆள்கின்ருரன்றிச் சுவை, விறல் என்பவற்றை யாண்டும் ஆளவில்லை!' என்பது நாவலர் பாரதியார் கூற்ருகும்.

'பண்ணை' என்பதற்கு ''விளையாட்டு ஆயம்' என இளம்பூரணரும், ''முடியுடைவேந்தரும் குறுநில மன்னரும் முதலாயி

ஞோர் நாடகமகளிர் ஆடலும் பாடலுங் கண்டுங் கேட்டுங் காமநுகரும் இன்ப விளையாட்டு'' எனப் பேராசிரியரும் உரை கூற, நாவலர் பாரதியாரோ, ''பண்ணை என்பது, தனிநிலை கருதாமல் ஒருபுறக் குறியால் புலப்படும் இனத் தொகுதி'' என்று புத்துரை கூறியதோடு, ''இஃது இப் பொருட்டாதல், 'ஏலத்தன முரசின் பண்ணை' என்னும் கம்பரின் செய்யுளடியாற் றெளிக'' எனச் சான்றும் காட்டுகின்றார்.

உரையாசிரியரும் பேராசிரியரும் 'வடமொழிக் கூத்தியற் குறிப்புக்களையே தொல்காப்பியர் கூறினார்' என்னும் பொருள்பட உரை எழுதிப் போந்தனர். ''இவர்கள் கூற்று மெய் யெனக் கொள்வோமாயின, தொல்காப்பியரே இதனை வெளிப் படையாகக் கூறியிருப்பாரன்றோ? சூத்திரமாவது, ஆடி நிழல் போல, நாடுதலன்றப் பொருள் நனிவிளங்க அமையவேண்டும்'. என இலக்கணம் வகுத்த தொல்காப்பியரே, படிப்பவர்மருளு மாறு சூத்திரம் அமைப்பாரோ? எனவே, இவ்வுரைகாரர்கள் கூறும் 'பிறமொழிக் கூத்து நூற்சத்துவங்கள் 'தொல்காப்பியர் இயற்றமிழ்ச் செய்யுளுக்குக் கூறும் மெய்ப்பாட்டுணர்வுகள் ஆகா!'' என நாவலர் பாரதியார் விளக்கம் கூறுவது அறிவி னுக்கு விருந்தாக அமைகின்றது!

(2) 'பண்ணை ... நானான் கென்ப' எனும் நூற்பாவில், 'நானான் கென்ப' என்பதற்கு உரைகாரர்கள் 'பதினாறு' எனப் பொருள்கொள்வர். 'சுவை எட்டு; குறிப்பு எட்டு ஆகப் பதினாறு' என்பது இளம்பூரணர் விளக்கம். ''அச்சத்திற்கேதுவாகிய புலியும் பேயும் சுவைப்படு பொருள்; அவற்றைக்கண்ட காலந் தொட்டு நீங்காது நின்ற அச்சம் சுவை; அதன்கண் மயக்கமும் கரத்தலும் குறிப்பு; நடுக்கமும் வியர்ப்புஞ் சத்துவம்''—என் பது இவர் உரை. பேராசிரியர், ''முப்பத்திரண்டு பொருளும், அவைகருதிய பொருட்பகுதி பதினாறாகி அடங்கும் நாடக நூலா சிரியர்க்கு'' என்று உரைப்பர்.

இதற்கு நாவலர் பாரதியார் கூறும் புத்துரை வருமாறு :- ''இதில் பொருள் முப்பத்திரண்டென ஒருங்கு எண்ணியபிறகு 'அவைகருதிய பொருட் பகுதி' எனப் பிரித்துப் பதினாறு எனச் சுட்டுமாறு என்னை? 'பொருள்கள் கருதிய பொருட்பகுதி'

என்பது பொருளில் வெற்றுரையாகும்!'' எனப் பேராசிரியர்தம் கூற்றை மறுப்பர்.

'நானூன் கென்ப' என்பதனை உரையாசிரியர்கள் 'பதினாறு எனப் பொருள் சொல்ள, இவரோ, நாலுநாலாய்த் தொகுத் தெண்ணப்படும்'' என்று கூறி'' நான்கு என்பதன்முன் வரும் நான்கு, 'நானூன்கு' ஆவதனறி. 'நந்நான்கு' ஆவது, பிற் காலப் பேச்சுவழக்கு'' என விளக்கமும் தந்து, ''முப்பத்தி ரண்டு பொருளும், புறத்தே மெய்ப்பாடாய்ப் புலனாதல் கொண்டே அறியப்படுதலானும், அவ்வாறு புலனாங்கால் அவை தனித்தனியே எள்ளற்குறி இளமைக்குறி பேதைமைக் குறி மடமைக் குறி என்று ஒவ்வொன்றும் வெவ்வேறாய்த்தனக்குரிய தனிக்குறியால் தோன்றாமல், நானூன்காய்ப்பண்ணோ கூடி நகை-அழுகை-இளிவரல்-மருட்கை - அச்சம் - பெருமிதம் - வெகுளி-உவகை எனும் மெய்ப்பாடு எட்டுவகையால் மட்டும் தோன்று தலானும், இவ்வியல்நெறி குறித்தல் வேண்டி இவ்வாறு கூறப் பட்டதென்க!!' என நயமும் தெளிக்கின்றார் நாவலர்!

''சுவைப்படுபொருள், சுவை, குறிப்பு, சத்துவம்'' எனப் பகுத்துரைக்கும் இளம்பூரணர்தம் கருத்தையும் இனிதாய் மறுத்துரைக்கின்றார் இவர்! ''எண்ணான்கு பொருளும் ஒராங்கே ஒருங்கெண்ணப்படுதலின், அவை ஒருதரப் பொருளாதல் ஒருதலை. அதற்கு மாறாக, அவற்றைச் சுவையூட்டும் புலி முதலிய புறப்பொருள் வேறு ...தம்முள் ஒவ்வா நால்வகையாய் உறழப் பிரித்தல் இங்குத் தொல்காப்பியர் கருத்தாமாறில்லை!.. எண்வகை மெய்ப்பாடுகளை எனைத்து வகைப் புறப் பொருள்க ளொடும் கூட்டவும் பெருக்கவும் வேண்டா!'' *

-இங்ஙனம் இவர் உரைக்கும்உரைஏற்புடைத்தென்பதனை, அடுத்து வரும் ''எள்ளல் இள்மை பேதைமை மடனென், றுள்ளப் பட்ட நகைநான் கென்ப'; முதலான எண்வகை மெய்ப்பாடுகளை விளக்கும் நூற்பாக்கள், 'நான்கு நான்கு' எனத் தொகுத் தெண்ணப் படுவனவற்றால் தெளியலாம்!

[3] 'நாலிரண் டாகும் பாலுமா ருண்டே' - என்ற நூற் பாவுக்கு, ''மேற்சொல்லப்பட்ட பதினாறு பொருளும் எட்டென

---

* இந்நூல் பக்கம் 24இல், விளக்கம் காண்க

வரும் பக்கமுமுண்டு; அவையாவன குறிப்புப் பதினெட்டனையுந் சுவையுள் அடக்கிச் சுவையெட்டுமாக்கி நிகழ்தல்'' என இளம் பூரணரும், ''முப்பத்திரண்டு மெய்ப்பாடும் பதினாறாதலேயன்றி எட்டாதலும் உண்டு; அவை வீரம், அச்சம், வியப்பு, இழிபு, காமம், அவலம், நகை, நடுவுநிலை யென்பன'' எனப் பேராசிரியரும் உரை கூறினர்.

நாவலரோ, ''செய்யுள் உறுப்பாம் மெய்ப்பாட்டுணர்வுகள், மேற்கூறியாங்கு நந்நான்காய் எண்வகை இயனெறி பிழையாது வருவனவேயன்றி, எவ்வெட்டாய்ந் நொக்கு வகைப் பட வரும் தன்மைய பிறவும் உள'' என்று கூறுவர். இதற்குச் சான்றாக 'ஆங்கவை யொருபா லாக வொருபால்' எனும் நூற் பாவைக் காட்டி 'உடைமை, இன்புறல், நடுவுநிலை, அருளல், தன்மை, அடக்கம், வரைதல், அன்பு' என எவ்வெட்டாய் முப்பத்திரண்டு எண்ணி முடித்துக் காட்டப்படுதலையும் விளக்கு வர்.

''பண்ணைத் ...... நான்கென்ப'' —என்பது தொகைச் சூத்திரம்

''நகையே...... டென்ப'' —என்பது வகைச் சூத்திரம்.

''எள்ளல் ...... சென்ப''—முதலாயின விரிச்சூத்திரங்கள். இவ்வாறே, ''நாலிரண்டாகும் பாலுமா ருண்டே'' - என்பது தொகைச் சூத்திரம். ''ஆங்கவை யொருபா லாக ... கடையே''- என்பது விரிச் சூத்திரம்-எனப் புத்துரைகாணும் நாவலர் திறம் அறிந்து இன்புறத் தக்கது!

இனி, இதே நூற்பாவுக்கு நாவலர், மற்றொரு நயவுரையும் நவில்கின்றார்: ''உய்த்துக்கொண்டுணர்தல் இரட்டுற மொழி தல் எனும் உத்திகளால் இச்சூத்திரத்திற்குப் பிறிதும் ஒரு பொருள் கொள்ளுதலும் பொருந்தும். இதில் 'நாலிரண்டு' என்பதை உம்மை தொக்க கூட்டெண்ணாக்கி, நாலும் இரண்டும் எனக் கூட்டி, அறுவகைப்படும் இயல்புடைய அகத்துறை மெய்ப்பாடுகளும் உளவெனப் பொருள் கூறி, அவ்வாறும் முறையே 'புகுமுகம் புரிதல் ... மொழிப' என்று தொடங்கிப், 'புலம்பிய நான்கே ஆறெனமொழிப' என எண்ணிமுடிக்கும் மெய்ப்பாட்டுத் தொகை ஆறுமாமென அமைத்துக் கோடலும் தவறாகாது!''

நாவலர் நயவுரை :

இனி, நூற்பாக்களுக்கு நாவலர் காணும் நயவுரைகளும் பலவாகும். அவற்றுட் சில:

(1) ''எள்ளல் ... ... கென்ப'' — என்ற நூற்பாவுக்கு, ''எள்ளல்—நகைமொழி அஃதாவது கேலி; இளமை — பழவு, அஃதாவது பிள்ளைத்தன்மை, அறிவு முதிராப் பிள்ளைமை; பேதைமை—அறிவின்மை. [Stupidity]; மடன்— ஏழைமை, அஃதாவது தேராது எளிதில் நம்பு மியல்பு. [Simplicity or innocence]. பேதைமை, உவர்ப்பிக்கும்; மடம், உவப்புதவும். எள்ளல் முதல் நான்கும் மகிழ்வொடு மருவும் பெற்றிய''— என்பது இவருரை.

[2] அழுகையின் வகையுள் ''இழிவு' என்பதும் ஒன்று. பேராசிரியர் இதனை 'இளிவே' எனப் பாடபேதமாகக் கொண்டு உரை எழுதுவர். 'பிறர் தன்னை எளியனாக்குதலாற் பிறபபது இழிவு' என்பர் இளம்பூரணர்; 'பிறரால் இகழப்பட்டு எளியனாதல் இளிவு' என்பர் பேராசிரியர். ஆனால், மெய்ப்பாடு எட்டனுள் 'மூப்பு, பிணி, வருத்தம், மென்மை' என நால்வகைப் படும் 'இளிவரலும்' ஒன்றாகச் சொல்லப்பட்டுள்ளது. ஆனால், முதற்கண் கூறிய இளிவு அல்லது இழிவுக்கும், பின்னர்க் கூறிய இளிவரலுக்கும்உள்ள வேறுபாடு யாது எனத்தெளிவான உரைவிளக்கம் காணவியலவில்லை. நாவலர் பாரதியார்,பின்வருமாறு உரைநயம் காண்பர்: ''இளிவு - இழுதகவு: பிறர் இகழ்வாற் பிறக்கும் அவலம்; பழிபிறங்கும் பான்மைத் தாம் இளிவரலன்று!'' எனறு 'இளிவு'க்கு விளக்கம் கூறி 'இளிவரல்' என்பதற்கு, 'மானம் குன்ற வருவது' ;இளிவரின் வாழாத மானமுடையார் எனவும், 'இடுக்கண்வரினும் இளிவந்த செய்யார் எனவும் வருதலான் இளிவரல் இப்பொருட்டாதல் தெளிக'' என விளக்கம் கூறுவர். ''முன் அழுகை வகையுள் ஒன்றாகச் சுட்டப்பட்ட இளிவு, அவலிக்கும் அவமதிப்பைக் குறிக்கும். அது பழிபடு குற்ற மின்றியும் பிறரிகழ்வாற் பிறக்கும் பெற்றியது;எனவே, இளிவு, தன்னெஞ்சுசுடுதலின்மையால் வாழ்வில் வெறுப்பு விளையாது ... இச்சூத்திரம் காட்டும் இளிவரல், உயிர்வாழ ஒல்லாமல் மானம் குன்ற

வரும் பழிநிலையைக் குறிக்கும்!'' என இளிவுக்கும், இளிவரலுக்கும் உள்ள நுட்பமான வேறுபாட்டைக் காட்டுவர் நாவலர்!

(3) ''ஆங்கவை யொருபா லாக'' என்ற நூற்பாவுக்கு, ''உடைமை முதல் நடுக்கு வரை எவ்வெட்டாய் எண்ணப்படும் உணர்வுகளும் செய்யுட் பொருள் சிறக்க வருவனவுள'' என்று கூறி, ''இவற்றிடை இன்னுமொரு தன்மை வேறுபாடு முளது. மெய்ப்பாட்டு வகை எண்ணான்கும் அகப்புறப் பொருட் பகுதிக ளிரண்டிற்கு மொப்ப வருபவை. இதிற் குறிக்கும் உணர்வு வகை நாலெட்டும் அகத்துறைக்குச் சிறப்புரிமை பெறுவன. இவை எவ்வெட்டாய், முறையே இயற்கைப் புணர்ச்சியும் இடந்தலைப்பாடும் பாங்கொடு தழாஅலும் தோழியற் புணர்வு மென்னுங் கந்நால்வகையினு மடைந்த சார்பொடு; கன்னிய நால்வகைக் கேற்பத் தொகுக்கப்பட்டுள'' என நயவுரையுங் காட்டுவர் நாவலர்.

(4) 'உடை பெயர்த்துடுத்தல்' [நூற்பா. 14] என்பதற்கு இளம்பூரணர் 'ஆடையைக் குலைத்துடுத்தல்' என்றும், பேராசிரியர் 'உடுத்த உடையினைப் பலகாலும் அழித்துடுத்தல்' என்றும் உரைகூறிப் போந்தனர். நாவலரோ, ''அழியும் உணர்வால் குழையும் உடலில் குலையும் கலையின் நிலையைத் திருத்தி அணிதல்' என்று கூறியதனேடமையாது. 'பெயர்த்து என்பது மீட்டும் என்பதைக் குறிக்கும்; அழித்து எனக் கொள்ளுதல் அமைவுடைத்தன்று. முன் கட்டியுள்ள ஆடை நெகிழ்வதை மீட்டும் இறுக்குதல் என்பதேபொருந்திய பொருளாகும்; அவ்வாறன்றி ஆடையைத் தலைவனெதிரில் தலைவிதானே அழித்துடுத்தல் பெண்ணீர்மையன்றாதலின் அது பொருளன்மை தேற்றம்!'' (பக்: 50-51) என விளக்குவது எத்துணை இன்பம் பயப்பதாக வுள்ளது!

(5) இவ்வாறே 'அல்குல் தைவரல்' என்பதற்கு, ''மேலது உடை பெயர்த்துடுத்தலாகலான் அதன் வழித் தோன்றுவது உடை பெரிதும் நெகிழ்ந்து காட்டுதலாயிற்று; அதனைப் பாதுகாத்தலின் அவ்வற்றம் மறைக்கும் கையினை 'அல்குல் தைவரல்' என்றானென்பது பேராசிரியர் உரை. இளம்பூரணரும் 'அவையல் கிளவி' யாகக் கொண்டு உரைகூறுவர். இவ்

வுரை பொருந்தாது எனக் கருதிய நாவலர், ''கலையின் மேலணி மேகலை தன்னொடு, தழையின் ஆகிய மேலுடை தொடுவது இருப்பிடம் [ஆசனம்] ஆவதன்றி, இடக்கர்ப் பொருள் குறிப்பதன்று என்பது தேற்றம் ... ... பொன்னொடு மணிமிடைந்த மேகலை இழைகளும், கலையின் மேலணி தழையுடை வகைகளும் அசைந்தாடும் உறுப்பெனக் குறிப்பதாலும், இடக்கரென அடக்காமல் அல்குலெனச் செய்யுளில் பல்காலும் வருதலானும் 'அல்குல்' அவையல்கிளவி யாகாமையும், இருப்பு உறுப்பையே சுட்டுதலும் தெளிவாகும்.......எனினும் அல்குலை அவையல்கிளவி யாக்கி அவிழ்த்து உடை நெகிழ்த்தவன் தன் அற்றம் மறைப்பதே அல்குல் தைவரல்' என்பர் பேராசிரியர். கற்பிறவாக்குலமகள் மணவாத் தலைவன்முன் மறந்தும் அது செய்ய ஒல்லாள். குலையும்கலை நிலையைத் திருத்துவதியல்பு. தலைவன் எதிரில் தலைவி உடை அவிழ்த்துத் திருத்தாளாதலின், அற்றம் மறைப்பதும் அதற்கு அல்குல் தைவரலும் அவள் எதிரில் அவள் எஞ்ஞான்றும் எண்ணவும் ஒல்லாள், அதனால் அஃதுரையன்மை அறிக!'' (பக். 52 - 53) எனப் புத்துரை காண்பது பொருத்தமாயுள்ளதன்றோ?

'தெய்வமஞ்சல்' என்பதற்கு, ''சூள் பொய்த்தல் பரத்தையர் கூட்டம் முதலிய தலைவன் தவறுகளுக்குக்கடவுள் அணங்குமெனத் தலைவி அஞ்சுவதாம். தெய்வம் தொழாது கணவற்றொழுவதே நல்லில்லாட்டியர் தொல்லறமாதலின், தெய்வம் பரவுதல் என்னுது அஞ்சல் என்று அமையக் கூறிய பெற்றியும் கருதற்பாற்று'' (பக். 79) என இவர் கூறுவது சிந்தனைக்கு விருந்தாயுள்ளது.

— இங்ஙனமே இவர் காட்டும் நயவுரைகள் பலகண்டு நமதுள்ளம் மகிழ்கின்றது!

முன்னோர் மொழிந்த மொழிபொருள் :

நாவலர் பாரதியார் நூற்பாத் தொறும் புத்துரை கண்டாலும், முன்னைய உரையாசிரியர்களான இளம்பூரணர், பேராசிரியர் போன்றோர் மொழிந்த கருத்துக்களில், ஏற்பனவற்றை எடுத்துரைக்கவும் தவறினரல்லர். சான்றாகச் சில காட்டலாம்.

[1] "இச்சூத்திரப் பொருள் இதுவே யென்பது இதன்கீழ் இளம்பூரணர் தரும் குறிப்பானும் தெளிவாகும்!" (பக்: 23) [2] 'நகையே' எனும் நூற்பாவின் கீழ்ப் பேராசிரியர் சுட்டும் குறிப்பினை அப்படியே எடுத்துக் காட்டுகின்றார் நாவலர். 'இது பிறர் வேண்டு மாற்றானன்றி இந்நூலுள் இவ்வாறு வேண்டப் படும் மெய்ப்பாடு என்பது உணர்த்துதல் நுதலிற்று எனப் பேராசிரியரே கூறுதலாலும் விளங்கும்,' என்று காட்டுகின்றார். [பக்:28] [3] "முன் சூத்திரத்திலிதை இளிவென்னாது இழி வென்றே இளம்பூரணர் கொண்ட பாடத்தானும் இவ்வுண்மை வலியுறும்" [பக்: 33]. [4] "இஃது இப்பொருட்டாதல் இளம் பூரணருக்கும் கருத்தென்பது அவர் உரைக் குறிப்பால் அறிக." [பக்:52] [5] 'இவையும் உளவே' என்பது பிந்திய பேராசிரி யர் பாடமாயினும் 'அவையும் உளவே' என்பதே அவருக்குக் காலத்தால் முந்திய இளம்பூரணர் கொண்ட பழைய பாடமா கும்!" [பக்: 61-62]. [6] "இது பேராசிரியர்க்கும் கருத்தா தல், 'வேண்டியவாறு கூட்டம் நிகழப் பெறாமையின், தலைமக ளொடு புலந்தாள் போல மடிந்தொன்றுமாதலின்' என்னுமவர் உரைக் குறிப்பால் உணர்க!" [பக்: 77].

## இயற்றமிழ் ஏற்றம் இயம்பல் :

நாவலர் பாரதியார், தம் புத்துரையில் இயற்றமிழின் ஏற்றத்தை இனிது எடுத்து இயல்பும் திறமும் காணலாம். ஒல்லும் வகையான், தமிழ்ப் பண்பாட்டையும், தமிழர்தம் பண்டை மரபையும் செல்லும்வாயெல்லாம் சிந்தைமகிழ்வுடன் எத்துவது இவர்தம் இயல்பு.

"இச்சூத்திரத்தின் செம்பொருள் இதுவாகவும், பேராசிரி யரும் பிறரும் ஆன்றதமிழ்மரபும்தெளிசொற் குறிப்பும் முரண உரைகூறி மயங்க வைப்பர். "(பக்: 23). "... அதனாற் பிறமொழிக் கூத்தியற் கொள்கைகளை இதிற்புகுத்தி இடர்ப் படலாயினர்" (பக்: 24); "இவையெல்லாம் ஆரியக் கூத்து நூலார் கோள்களாதலின் அவை இயற்றமிழ் நூலில் இடம் பெறற்கில்லை! ... இதுவுமன்றி, இவ்வுரைகாரர் கூறும் ஆரிய

நாடக நூற் சத்துவங்கள் தொல்காப்பியர் இயற்றமிழ்ச் செய்யுளுக்குக் கூறும் மெய்ப்பாட்டுணர்வுகள் ஆகா! (பக்: 25). ''இம் மெய்ப்பாட்டு முறை பிற ஆரியக் கூத்து நூல் வழக்கொடு படாமல் என்றும் இயற்றமிழ்ச் செய்யுளுறுப்பாய்த் தொன்று தொட்டு நின்று நிலவும் மரபிற்குரும் ... அன்றியும் ஆரிய நூலார் கூறும் நவரசங்கள், இம் மெய்ப்பாடுகளின் வேறாய் நடன நாட்டியச் சத்துவங்களாம். அவை முறையே சிருங்காரம், ஆசியம், கருணை, ரௌத்திரம், வீரம், பயம, குற்சை, அற்புதம், சாந்தம் என்பனவாம ...... 'குற்சை' என்பது அருவருப்பு. இதனை எனைத்து வகையானும் தமிழ்ச் சான்றோர் செய்யுளில் என்ஞான்றும் உயர்ந்த சுவைதரும் மெய்ப்பாட்டுப் பொருளாகக் கொண்டிலர்!'' [பக் 28—29]

—இங்ஙனம், இவர் ஏத்துமிடங்கள் இந்நூலிற் காணலாம்.

நுண்மாண் நுழைபுலம் :-

நூற்பாக்களை விளக்குமிடத்து, உரையாசிரியர்கள் காட்டும் செய்யுட்களை அப்படியே, மீட்டும் காட்டாமல், சங்க இலக்கியங்களினின்றும், பிறவற்றினின்றும் வேறு பல செய்யுட்களைச் சான்ருகக் காட்டுவது, நாவலர் பாரதியாரின் இயல்பாகும். இஃது இவரது நுண்மாண் நுழைபுலத்தையும், பன்னூற் பயிற்சியையும் அறியத் துணைபுரியும்!

'எள்ளல்' என்பதற்கு இளம்பூரணர், 'நகையா கின்றே தோழி' எனும் நெடுந்தொகைப் பாடலையும்; பேராசிரியர், 'எள்ளி நகினும் வருஉம்' [கலித். 61], 'நல்லை மன்னென நகூஉப்பெயர்ந் தோளே' [அகம் 248] என்ற பாடல்களையும் சான்ருகக் காட்டுவர். நாவலரோ, 'ஊரன் ...... தாய்க்கே' எனக் குறுந்தொகைப் பாடலை [எண் 8] க் காட்டுவர். இவ்வாறே, நூற்பாத் தோறும் பெரும்பாலும், புதிய பல எடுத்துக்காட்டுக்களைக் காட்டிச் செல்வர்! இவர் எடுத்தாண்டுள்ள நூற்பட்டியலைக் காணுமிடத்து, இவர்தம் புலமைத்திறத்தைஒருவாற்ருன் அறியக்கூடும்!





இலக்கண நடை :-

நூலுக்கு உரைகாண வந்த உரையாசிரியரனைவரும், இலக்கண நடை காட்டி எழுதுவது மரபு. "பண்ணைத் தோன்றிய கண்ணிய புறன் எனப் பெயரெச்ச அடுக்காகக் கூட்டுக. அன்றியும், எண்ணான்கு பொருளுங் கண்ணிய புறன் என ஒரு சொல் நடையாக ஒட்டித், தோன்றிய என்னும் பெயரெச்சத்திற்கு முடிபாக்கினும் அமையும். புறன் என்றும் எழுவாய் நானான்கென்னும் பயனிலை கொண்டு முடிந்தது!"-இஃது இளம்பூரணர் காட்டும இலக்கண நடை. [மெய்ப்: நூற்பா 1.]

"எண்ணு நிலைவகையால் தொகைபெற்ற நான்கென்னும் எழுவாய்க்கு மூன்றென்பது பெயர்ப்பயனிலையாய் வந்தது"— இது, பேராசிரியர் காட்டும் இலக்கண நடை [மெய்ப்: நூற்பா: 15]. "இனி, வினையுயிர் என்பதை உம்மைத் தொகையாககி, "செயலும் உயிரும் ஒய்ந்து கையறு நிலையில்" என உரை கொள்ளினும் அமையும். ஈற்றேகாரம் அசை. 'இனமையும்' என்பதன் உம்மை எதிர்மறைப் பொருட்டு; உண்மையே பெரு வழக்கென்பது 'உம்மை'க் குறிப்பு".

—இது, நாவலர், பாரதியார் காடடும் இலக்கண நடை. (பக்: 60)

இனி, நாவலர்,நூற்பாவுக்குஉரைகூறுங்கால், [1] கருத்து (2) பொருள் [3] குறிப்பு என மூவகையாகப் பகுதது்க்கொள்வார். 'நூற்பா நுவலும் கருத்து இஃது, எனக் 'கருத்து' என்ற பகுதியிலும்; 'பதவுரை' யினைப்'பொருள்' என்ற பகுதியிலும்; 'விளக்கவுரை, மேற்கோள்,சான்று' முதலானவற்றைக் 'குறிப்பு' எனும் பகுதியிலும் விளக்குவது, படிப்போர்க்குப் பெரு விருந்தாய் அமைவன.

இவ்வாறே நூல் முழுமையும் நாவலர் பாரதியார் அரிய பல நயவுரைகளை அள்ளி வழங்குகின்றார். இவற்றைப்படிக்கும் போது, தொல்காப்பியநூல் முழுமைக்குமே இவர் உரை எழுதியிருந்தால், எத்துணைப் பெரும்பயன் கிட்டியிருக்கும் என்ற உணர்வு தோன்றாமற் போகாது. எனினும் இவர் எழுதிய

'மூவிப் புத்துரை' தமிழகம் உள்ளளவும் நின்று நிலவத் தக்கது! இத்தகு உரையினைப் படித்து, ஆராய்வதும், மேலும் புத்தம் புதிய பொருளுரைகளைக் காண்பதும் தமிழ் ஆய்வாளர்களின் கடனாகும்! இவ்வகையில் நாவலர் ச. சோ. பாரதியாரவர்கட்குத் தமிழ்ப் பெருமக்கள்என்றும்கடப்பாடுடையராவர்!

வாழ்க தொல்காப்பியர்! வாழ்க நாவலர் பாரதியார்!



## இம்மெய்ப்பாட்டியற் புத்துரையில் நாவலர் பாரதியார் மேற்கோளாகக் கா.

## நூற்பட்டியல்

[தொகுப்பு : பேராசிரியர் ச. சாம்பசிவனார், எம்

[எண் : பக்க எண்]



